Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 30

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



[illegible]வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975 டிசம்பர், மார்கழி மீ

# Sri Varadarajaswamy Temple - Kanchi.

By K. V. RAMAN, M. A., Ph. D.,

[*Abinava Publications, New Delhi*].

Price Rs. 90—00 [18 டாலர்கள்]

ஸ்ரீ காஞ்சி வரதராஜஸ்வாமி கோயிலைப் பற்றிய இச்சிறந்த புத்தகத்தின் விலையைக் கண்டு திடுக்கிடவேண்டாம். இதில் அடங்கியுள்ள 38 வெகு அழகிய இதுவரையில் ப்ரசுரிக்கப்படாத, புகைப்படங்கள் மாத்திரம் இந்த விலைக்குமேல் பெறும். இந்நூல், இதன் பேராசிரியரின் டாக்ட்ரேட் [Ph. D.] டிகிரிக்காக, நூற்றுக்கணக்கான கல்வெட்டுகளையும் பற்பல சரித்திர, சம்பிரதாய நூல்களையும் ஆராய்ந்து எழுதப்பட்டு அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இதில், இத் தேவஸ்தானத்தைப் பற்றிய ஸகலமும், அதாவது சரித்திர உண்மைகள், இக்கோயிலிலுள்ள, ஆழ்வார்கள் ஆசார்யர்கள் சன்னிதிகள் உட்பட எல்லா சன்னிதிகள், ஆங்காங்குள்ள நுண்ணிய சிற்பக் கலையழகு, தினப்படி பூஜாக்ரமம், மாதாந்த, வருஷாந்த உத்ஸவங்களின் ரீதி, நிர்வாகத்தன்மை முதலியவையெல்லாம் அடங்கியுள்ளது பூதத்தாழ்வார் போன்ற சிறந்த வைணவ பக்தர்களின் மங்களாசாஸனத்தினாலும், பிறகு இராமானுஜர், கூரத்து ஆழ்வான், திருக்கச்சிநம்பிகள், பிறகு வேதாந்த தேசிகன், மணவாளமாமுனிகள் போன்ற பூர்வாசாரியர்களின் ஈடுபாட்டினாலும், இத்தேவஸ்தானம் இப்போதிருக்கும் உன்னத நிலைக்கு வந்துள்ளது. சோழ வரசர்கள் காலம் தொடங்கிப் பாண்டியர்கள், சேரர்கள் விஜயநகரத்தரசர்கள் முதலியோர் காலங்களில் இக்கோயிலுக்கு அவ்வப்போது ஏற்பட்டுள்ள நன்மைகளையும், கட்டிட விருத்திகளையும் தகுந்த ஆதாரங்களுடன் படிப்படியாக விளக்கி வந்துள்ளார், இவ்வாசிரியர்.

விஜயநகரத்துப் பேரரசர்கள், அதாவது, கிருஷ்ணதேவராயர் [கி. பி. 1509-1529], அச்சுத தேவராயர் [1529-1542], சதாசிவராயர் [1542-1565] ஆக இம் மூவர்காலமே விஜயநகர சாம்ராஜ்யத்தின் பொற்காலமாகும்; இதுவே வைணவ சமயத்தின் பொற்காலமாகும்; இதுவே இத்தேவஸ்தானத்தினுடையவும் பொற்காலமுமாகும்; அக்காலத்தில் தான். இக்கோயிலுக்கு பெருமதிப்பைத் தரும் கிழக்கு வாயிலிலுள்ள, 180 அடி உயரமான ஒன்பது நிலைகளையுடைய அழகி கோபுரம், மேல் நாட்டவரின் மனதையும் கொள்ளை கொள்ளும், நூறு கால்களையுடைய கல்யாண மண்டவம், பெருந்தேவித்தாயார் சன்னிதியின் முன் மண்டமம் அபிஷேக மண்டவத்தின் முன்மண்டவம், இதற்குத் தெற்கிலுள்ள மணவாளர் முற்றத்தில் அமைக்கப்பட்டுள்ள அற்புத ஆண்டாளின் ஊஞ்சல் மண்டவம், இவைகளைச் சுற்றியுள்ள மதிள்கள் முதலானவை, காஞ்சீ வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமி புருஷகாரத்தினால் கட்டப்பட்டவை என்று தகுந்த ஆதாரங்களுடன் விளக்கியுள்ளார். இந்த ஜீயர் ஸ்வாமி இக்கோயிலுக்கு அப்போது பல வருஷங்கள் ஸ்ரீ கார்யதுரந்தரராகவுமிருந்திருக்கிறார்.

(இதன் தொடர்ச்சி ராப்பர் மூன்றும் பக்கம் பார்க்கவும்)

# ஸ்ரீ ராமாநுஜன்—330



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸஸு மார்கழிமீ 10—12—75 | ஸஞ்சிகை 6


## மார்கழித் திங்களநுபவம்



"மன்னியசீர் மார்கழியில் கேட்டையானது, மாமறையோன் தொண்டரடிப்பொடியாழ்வார் பிறப்பால் நான்மறையோர் கொண்டாடும் நாள் என்பது உலகமறிந்ததே. இவ்வாழ்வார் பேரருள்கொண்டு நமக்கு ஊட்டிய அர்த்த விசேஷங்களுள் சிலவற்றை யநுபவித்து மகிழ்வோமாக. இவ்வாழ்வாரருளிய திருமாலை யின்சிறப்பை,'திருமாலையறியாதவன் திருமாலை யறியான்'' என்னும் முதுமொழியே விளங்கக் காட்டும். அத்தகைய பெருமைவாய்ந்த அத் திவ்யப்பிரபந்தத்தில் "மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்துடையபேரால், கத்திர பந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்" என்ற பாசுரத்தில் எடுத்தாளப்பட்டுள்ள க்ஷத்ர பந்துவின் சரிதையானது அவசியம் அறியத்தக் கது. இது ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் தொண்ணூற் றேழாவது அத்யாயத்தில் பரக்கக்கூறப்பட்டுள்ளது.. அதன் சுருக்கம் வருமாறு:—

(க்ஷத்ரபந்துவின் உபாக்யானம்)

மிகக்கொடிய நடத்தைகளையுடையனாய், பல்வகைப் பாவங்களும் உரு வெடுத்து வந்தன வென்னும்படி மஹாபாபியான க்ஷத்ரபந்து என்பானொருவன்

இருந்தான்; அவன் தனது கொடுமையினால் தாய் தந்தை மக்கள் மித்திரர் அனைவராலும் கைவிடப்பட்டவனாய், காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸையினால் வயிறுவளர்த்து வந்தான். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில், ஒருநாள் ஒரு மாமுனிவர் கொடிய வெய்யில்வேளையில் வழிதப்பி, இப்பாவி திரியுங் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்காயினர். அவரைக் கண்டதும் அவருடைய பரிதாபத்தைக் கண்ட இவனுக்குத் தன்னையுமறியாமல் அம்முனிவர் விஷயத்திற் காருண்யமுண்டாகி, 'மாமுனிவரே! இஃது உம்முடைய வழியன்றே; வழிதப்பி வந்தீர்போலும்; உற்றுநோக்கிப் பாரும்' என்று முனிவரை நோக்கிக் கூற, அவரும் உணர்ந்து, பொறுக்க முடியாத தாஹத்தையுடையவராய் ஒரு தடாகத்தைத் தேடிச் செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக்கண்டு, தாபமிகுதியால் சடக்கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அங்கிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, அம்முனிவரைப் பிடித்துத் தூக்கித் தேற்றித் தாமரைக்கிழங்குகளை உணவாகக்கொடுத்து விடாயைப் போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒருமரத்தடியில் உட்கார அவரது கால்களின்நோவுதீர நன்றாகபிடித்து உபசாரங்களைச்செய்த க்ஷத்ரபந்துவை நோக்கி அம்முனிவர், 'பேருபகாரம்புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்தவன் நீ? உனது வரலாறுகளைக் கேட்க விரும்புகிறேன்' என்ன, அது கேட்ட அவனும் 'முனிவர்கோமானே! நான் ஸூர்யவம்சத்தில் வீர்வாநன் என்பவற்கு மகனாய்த் தோன்றியவன்' என்று தொடங்கித் தனது கொடுமைகளை யெல்லாம் ஒன்றும் ஒளிக்காமல் உள்ளபடி சொல்ல; அவற்றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்தவேணுமென்ற கருத்துக்கொண்டு 'அப்பா! இனி இத்தீய குணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரம தர்மமாகக் கடைப்பிடிக்க உன்னாலாகாதோ?' என்று கேட்க; அதற்கு அவன் 'காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்னும் தீக்குணங்கட்குப் பிறப்பிடமான நான் அவற்றைவிட்டுப் பிரிந்து ஒருக்ஷணகாலமும் இருக்ககில்லேன்; என் மனம் என்வசமன்று; இது தவிர வேறு நியமனமுண்டாகில் சிரமேற்கொள்ளக் காத்திருக்கிறேன்' என்ன; எப்படியாவது இவனை வழிப்படுத்தவேணுமென்னும் பேரவாக்கொண்ட முனிவர் 'இது மாட்டாயாகில், எப்போதும் கோவிந்த! கோவிந்த! என்று சொல்லிக்கொண்டிருக்கவாவது உன்னால் முடியுமோ? இருமினாலும் தும்மினாலும் கோவிந்த! என்றே சொல்லிக்கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம்' என்று சொல்லிவிட்டுப்போயினர். அது முதலாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தை இடைவிடாது ஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டிருந்தான். சிலகாலங் கழித்து அவன் மரணமடைந்து அந்தணர்குலத்தில் பூர்வஜந்ம ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தமமான ப்ராஹ்மண குலத்தில் எனக்குப் பிறவிநேர்ந்ததும் பூர்வஜந்ம ஸ்மரணமுண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்தநாம ஸங்கீர்த்தநத்தின் பயனன்றோ? ஆகவே எனக்கு மேலான நன்மையை விளைக்க அந்த கோவிந்தனையே நான் ஆராதனஞ்செய்து, *தீண்டா வழும்புஞ் செந்நீருஞ் சீயும்நரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகுமுடலை விட்டு * மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலத்தைக் கடந்து * நலமந்தமில்லதோர்

நாடாகிய பரமபதத்தை அடையக் கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரமபாகவதனாகி வீடுபெற்றனன் என்பதாம்.

இத்திருமாலையிலுள்ள (2) *பச்சைமா மலைபோல் மேனி* (14) *வண்டினமுரலுஞ் சோலை* (19) *குடதிசை முடியைவைத்து*......இப்பாசுரங்கள் அநவரதமும் சொல்லிக் கொண்டிருந்தாலும் தெவிட்டாத அம்ருதமாயிருக்கும். *வண்டினமுரலுஞ்சோலையின் விவரணம் இம்விதழிலேயே அடுத்த பகுதியிற் காண்க.

இவ்வாழ்வார் இந்திருமாலை தொடங்கும்போதே *காவலில் புலனைவைத்து* என்று தொடங்குகின்றார். செவி வாய் கண் முதலிய இந்திரியங்களைச் சிறையில் வைத்து நமன்தமர்தலைகள்மீதே தாம் நர்த்தனஞ் செய்வதாகக் களித்துப் பேசுகின்றார். இவருடைய சரித்திரத்தில் இவர் சில காலம் இந்திரியங்களுக்கு வசப்பட்டிருந்ததாகவும் அதன் பலனைச் சிறையிருந்ததாகவும் சொல்லப்படுகிறது. அப்படி தம்மைக் காவலில் வைத்த புலன்களைத் தாம் காவலில் வைத்ததாகப் பேசுகிறவிது. மந்தோதரியினுடைய ஒரு அழகிய பேச்சை நினைப்பூட்டுகின்றது. அதாவது, இராவணன் இராமபிரானால் கொல்லப்பட்டு மாண்டொழிந்தானென்பதையறிந்த அவள் போர்க்களத்திலே வந்து புரண்டழும்போது *இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா, ஸ்மரத்பிரிவ தத் வைரம் அத்ய தைரேவநிர்ஜித:* என்றாள். இராவணன் நெடுங்காலம் இந்திரியநிக்ரஹஞ் செய்து கோரமாதவம்புரிந்து அதன் பலனாக மூவுலகங்களையும் வென்றவன். அந்த இந்திரியங்களானவை இப்பாவி நம்மைப் பங்கப்படுத்திவிட்டானே யென்று கறுவியிருந்து ஸமயம்பார்த்து அவையே இவனைப் பங்கப்படுத்திவிட்டனவாம். இந்திரியங்களை அடக்கியாண்டவன் இந்திரிய கிங்கரனானமையாலே பங்கப்பட்டானென்றவாறு. அதுபோல, இவ்வாழ்வாரும் தம்மை முன்பு பங்கப்படுத்தின [—சிறையிலிட்ட] அவ்விந்திரியங்களைத் தாம் பங்கப்படுத்திக் காவலில் வைத்து ஸித்திபெற்றதாகக் கூறினவிது பக்தர்களுக்கு ஜிதேந்த்ரியத்வ முண்டானால் எதுவும் சாதிக்க வெளிதாமென்று காட்டினபடி. *

... ... ...

# மார்கழித் திருவத்யயநோத்ஸவ வரலாறு

மாஸங்களிற் சிறந்தது மார்கழி மாதமென்பது ஸ்ரீகீதாசார்யாபிமதமாகும். தேவதைகளின் திநாரம்பமான தைமாஸத்துக்குப்பூர்வபாவியாய் ப்ராதஸ்ஸமயமாயிருப்பதே அப்படி அந்தமாஸம் கொண்டாடப் படுவதற்குக் காரணமாயிருக்கும். அந்த மாதத்தில் சுக்கிலபக்ஷ-ஏகாதசி தொடங்கிப் பெரிய பெருமாள் வடமொழி வேதத்தைக் கேட்டுப்போருவது வழக்கமாயிருந்ததாம். அதற்கு அத்யயநோத்ஸவமென்று பெயராம். அப்படி நடந்துவாராநிற்கையில் திருவரங்கம் பெரியகோயிலில் ப்ராகாராதி நிர்மாணகைங்கர்யங்களைச்செய்தருளின திருமங்கைமன்னன் காலத்தில் அவ்வாழ்வாருக்குப் பெரிய பெருமாள் அருள்பாடிட்டு ஸம்ஸ்க்ருத வேதஸாம்யம் தென்மொழிவேதமாகிய திருவாய்மொழிக்கு உண்டென்று தாம் திருவுள்ளம் பற்றியிருப்பதை ஸகலரும் அறிந்து கொள்வதற்காக திருவரங்கந்திருப்பதியினின்று திருக்கார்த்திகையானதும் ஆழ்வார் திருநகரிக்குப் பயணமாகி ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து திருவாய்மொழியின் பாராயணம் நடத்தும்படி

நியமித்தருளினர். அப்படிப் பெரியபெருமாள் அநுக்ரஹித்த நியமனத்தை சிரஸாவஹித்துக் கலியனும் திருக்கார்த்திகையானவுடனே திருவரங்கத்திலுள்ள கோயில் பரிஜநங்களுடன் ஆழ்வார்திருநகரிக்குப் பயணமாகி அங்குநின்றும் ஆழ்வாரையெழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து ப்ரதிஸம்வத்ஸரமும் சுக்லபக்ஷ ஏகாதசி தொடங்கித் தினம் ஒவ்வொரு பத்து வீதம் திருவாய்மொழி பத்துபத்தையும் பத்துநாள் உத்ஸவத்தில் வடமொழி வேதத்தோடு கேட்பித்தருளித் திருவாய்மொழிக்குவேதஸாம்யம் பெருமாள் திருவுள்ளம்பற்றியிருப்பதைப்ரகாசிப்பித்தருளினர். இப்படி நிகழ்ந்து வாராநின்ற மேற்படி உத்ஸவம் பிறகு காலக்ரமத்தில் நடந்தேறாமல் நின்றுவிட, வெகுகாலத்திற்குப்பின் நம்தர்சநஸ்தாபகாசாரியர்களில் தலைவரானஸ்ரீமந்நாதமுனிகள்*பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரின் திருவுள்ளத்தை அடியொற்றித் திருவாய்மொழியோடு மற்ற முதலாயிரம்,முதலியபிரபந்தங்கட்கும் வேதஸாம்யமுண்டென்பது ப்ரகாசிக்குமாறு மார்கழிமாஸத்துச் சுக்லபக்ஷ ஏகாதசிக்கு முன்பு பத்து நாள்களில் முதலிரண்டாயிரத்தையும் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி தொடங்கிப் பத்துநாள்களில் திருவாய்மொழியாயிரத்தையும் திருவாய்மொழி முடிந்த மறுநாள் இயற்பாவாயிரத்தையும் நம்பெருமாள் வடமொழி வேதத்தோடு திருச்செவிசாத்தும்படி ஏற்பாடு செய்தருளினர். அப்படி யேற்பாடு செய்கையில் திருக்கார்த்திகையானதும் ஸ்ரீரங்கத்திலுள்ள பரிஜனம் பலவற்றோடும் ஆழ்வார் திருநகரிக்குப் பயணமாகி நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கலியனையும் முன்னிட்டு உத்ஸவத்தை விமர்சையாக நடப்பிக்கலானார். திருக்கார்த்திகை யானதும் ஆழ்வாரை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து திவ்யப்ரபந்தங்களைப் பெரிய பெருமாள் திருச்செவிசாத்தியருளுங் காலவெல்லையே இந்தத் தென்மொழி வேதத்துக்கு அத்யாயோத்ஸர்ஜனகாலமாகும். முதற்பத்து நாள்களில் நடக்கும் உத்ஸவம் மத்தியான்ன காலத்திற்குள் திவ்யப்ரபந்தத்தைப் பெருமாள் திருச்செவி சாத்தும்படி இருப்பதால், அது பகற்பத்து என்றும், பின்பு வைகுண்ட ஏகாதசி தொடங்கி நடக்கும் உத்ஸவத்தில் திருவாய்மொழிப்ரபந்தம் இராத்திரியில் திருச்செவிசாத்தும் படியிருத்தலால் அது இராப்பத்து என்றும் வழங்குவதாயிற்று. இந்த உத்ஸவங்களில் வடமொழிவேதத்தோடொப்ப திவ்யப்ரபந்தங்களும் ஸேவிக்கப்பட்டுப் பெரிய பெருமாளால் மிகவும் திருவுள்ளவுகப்போடு திருச்செவி சாத்தப்படுவதால் இந்த உத்ஸவம் திருவத்யயன உத்ஸவமென்று பெரியோர்களால் வழங்கப்படுவ தாயிற்று. (அத்யயனமென்றால் வேதமோதுதல்.) இப்படி நடந்து வாரா நின்ற உத்ஸவம் கால கௌடில்யத்தால் ஆழ்வார் திருநகரியினின்று ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து நடத்துவது கஷ்டஸாத்யமாய்விட, பிற்காலத்திலுள்ள பெரியோர் திருவரங்கத்திருப்பதியில்தானே ஏறியருளப்பண்ணின நம்மாழ்வாரைக்கொண்டு மேற்படி உத்ஸவத்தைச்சிறப்பாக நடத்தலானார்கள். [இந்த வரலாறு வைகுண்டவாஸிகளான கோயில் ஸ்ரீ கஸ்தூர் ஜீயர் ஸ்வாமியும் பத்தராவி ஸ்வாமியும் ஸாதித்தருளக் கேட்பது ] இது நிற்க.

இந்த ஸம்வத்ஸரம் கோயிலில்மட்டும் அத்யயநோத்ஸவம் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. வைகுண்ட ஏகாதசியும் கார்த்திகை மாதத்திலே. எதனால்? ப்ரஹ்மோத்ஸவமான தையுத்ஸவம் மார்கழி முடிவில் த்வஜாரோஹணமாவதால்,

# அருளிச்செயலநுபவமும் ஆசார்யஸூக்தியநுபவமும்

மார்கழி மாதத்தின் தெய்வமான தொண்டரடிப்பொடியாழ்வாரருளிய திருமாலையில் (14) "வண்டினமுரலுஞ் சோலையென்னும் அமுதவெள்ளமான பாசுரத்தின் முன்னிரண்டடிகளின் விசேஷார்த்தம் பட்டர் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு அநுபவிக்கலாகிறது.

அணிதிருவரங்கத்திற்கு அடைமொழிகள்—

"வண்டின முரலுஞ்சோலை மயிலின மாலுஞ்சோலை
கொண்டல்மீதணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை"

இதில்—வண்டு, மயில், கொண்டல், குயில் என்கிற நான்கு சொற்களாலும் கருதப் பட்டவன் அரங்கமாநகரமர்ந்த அழகிய மணவாளனேயென்று ரஸிகர்கள் உகக்கும் படியானவொரு நிர்வாஹங்கேளீர். ஸ்ரீரங்கநாதனை முற்றூட்டாக வநுபவித்த பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனையே வண்டாகவும் மயிலாகவும் கொண்டலாகவும் குயிலாகவு மருளிச் செய்துள்ளாரென்பதை விளக்குகின்றேன்.

(1. வண்டு) ஸ்ரீரங்கராஜஸ்தவே 1-10 "லக்ஷ்மீகல்பலதோத்துங்க ஸ்தநஸ் தபகசஞ்சல:, ஸ்ரீரங்கராஜப்ருங்கோ மே ரமதாம் மாநஸாம்புஜே" என்கிற சுலோகத்தில் ஸ்ரீரங்கராஜ ப்ருங்க: என்னும் பதத்தினால் அரங்கனை ஒரு வண்டாக ரூபித்திருப்பது ஸ்பஷ்டம். சுலோகத்தின் பொருளாவது;—

வண்டானது கொடிகளில் பூங்கொத்துக்களில் சுழலாநிற்கும்; இந்த ரங்கநாதனாகிற வண்டோவென்னில், பிராட்டி என்கிற ஒரு கல்பவல்லியிலுள்ள ஸ்தநமாகிற பூங்கொத்திலே "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா!" என்னுமாபோலே காமுகமாயிருக்கும். இப்படிப்பட்ட வண்டானது அடியேனுடைய ஹ்ருதயபுண்டரீகத்திலே விரும்பி வாழ்ந்திடுக வென்கை. உலகில் வண்டானது பூங்கொத்துக்களைக் கண்டால் அவற்றைச் சுற்றிச் சுழலமிடாநிற்கும்; தாமரை மலரைக்கண்டால் உள்புகுந்து படிந்து ரமியாநிற்கும்; இதுதோன்ற இங்கு 'ஸ்தபக சஞ்சல:' என்றும் 'அம்புஜே ரமதாம்' என்றும் சொல்லிற்று என்கிற நுட்பமறிக.

(2. மயில்) ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகே 44 "ப்ரலய ஸமயஸுப்தம், ஸ்வம் ஶரீரைகதேஶம் வரத! ஶிஶிராக்ஷ்ம் ஸ்வேச்சயா விஸ்த்ருணுந:, கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூந்வந் அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்" என்கிற சுலோகத்தில் ஸ்ரீரங்கநாதனுக்கு மயிலை உபமானமாகக் கூறியுள்ளார். இந்த சுலோகத்தின் பொருளாவது;— கீழ் 'அசிதவிசேஷிதாந்' என்ற ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜகத் ஸ்ருஷ்டியானது எப்படிப்பட்டதென்றால், குலாலாதிகள் கடபடாதிகளை ஸ்ருஷ்டிக்குமிடத்து நிமித்த காரண பூதர்களாக இருக்கின்றார்களை அப்படி எம்பெருமானும் இந்த ஜகத்துக்கு நிமித்தகாரண மாத்திரமாக இருந்து கொண்டு ஸ்ருஷ்டிப்பதன்று; பின்னையோவென்னில், ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமான தான் ஸ்தூல சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மமாக விரிவு பெறுவதே ஸ்ருஷ்டியாகும் என்கிற அர்த்தத்தை இந்த ச்லோகத்தில் ஒரு சமத்காரமாக

அருளிச் செய்கிறார். நிமித்த காரணத்வத்தோடு உபாதாநகாரணத்வமும் எம்பெருமானுக்கு உள்ளதென்னுமிடம் இதனால் வ்யக்தமாகும். பிரளய காலத்தில் உறக்கங் கொண்டதுபோல் ஒடுங்கிப்போய் தேவரீருடைய திருமேனியில் ஏகதேசமாய்க் கிடந்த சேதநாசேதநப் பொருள்களை ஸ்வஸங்கல்பத்தினாலேயே விவிதவிசித்ரஜகதாகாரேண பரிணமிப்பியா நின்ற தேவரீர் பிராட்டியின் திருமுன்பே விளையாடா நின்றீர். இந்த விளையாட்டு எங்ஙனே யிரா நின்றதென்னில், ஆண் மயிலானது தன் உடலுக்குள்ளே ஒடுங்கியிருக்கின்ற தோகைகளை நன்கு விரித்துப் பேடையின் எதிரே ஆடுவதுபோல விரா நின்றது. இந்த மயில் த்ருஷ்டாந்தத்தினால் ஒரு விசேஷார்த்தம் கிடைக்கும்; அதாவது — கலாபம் ஆண்மயிலுக்கு உண்டேயல்லது பெண்மயிலுக்குக் கிடையாது; அதுபோல் ஜகத்காரணத்வமும் எம்பெருமானுக்குண்டேயல்லது பிராட்டிக்கு இல்லையென்பதாம்.

(3. கொண்டல்.) கொண்டலாவது — நீர்கொண்டெழுந்த காளமேகம். பட்டர்தாமே பூர்வஶதகே-82. *ஸிஞ்சேத் இமஞ்ச ஜநம் இந்திரயா தடித்வாந் பூஷாமணித்யுதிபி: இந்த்ரதநுர் ததாந:, ஸ்ரீரங்கதாமநி தயாரஸநிர்ப்பரத்வாத் அத்ரௌ ஶயாலுரிவ சீதலகாலமேக:* என்கிற சுலோகத்தில் ஸ்ரீரங்கநாதனைக் காளமேகத்தோடு ஒப்பிட்டிருக்கிறார். சுலோகத்தின் பொருளாவது—கீழ் சுலோகத்தில் பெரியபெருமாளைக் கடல்குட்டியாக உருவகப்படுத்திப் பேசினார். அவ்வளவோடு த்ருப்திபெற முடியுமோ? எல்லா அவயவங்களும் குளிரவேணுமென்று பாரித்திருப்பவரிறே இவ்வாசிரியர். ஆகவே, பெரியபெருமாளை சீதல காளமேகமாகப் பேசவேணுமென்று திருவுள்ளம்பற்றி அங்ஙனே ஸாவயவரூபகவிந்யாஸம் பண்ணுவதாம் இந்த ச்லோகம். காளமேகமானது மின்னலோடும் இந்திரதநுஸ்ஸோடும் கூடியிருக்கும்; ஜலத்தினால் பூர்ண கர்ப்பங் கொண்டு அசையமாட்டாமல் மலையுச்சியிலே படுத்திருக்கும்; இத்தன்மைகள் ஸ்ரீரங்கநாதனுக்கும் ஒக்குமென்று அடைவே நிரூபிக்கிறார் மின்னற்கொடி போன்ற பிராட்டி உறையப் பெற்றிருப்பதும், திருவாபரணங்களிலிழைத்த பலவகைரத்நங்களின் புகராகிற இந்த்ர தநுஸ்ஸையுடைத்தாயிருப்பதும், கருணாரஸம் நிரம்பியிருப்பதனால் ஸ்தாவரப்ரதிஷ்டையாக ஸ்ரீரங்கமந்திரத்தே போந்து சயநித்திருப்பதும் இந்த ஸ்ரீரங்கநாதகாளமேகத்தின் தன்மைகளாம், இப்படிப்பட்ட காளமேகம் அடியேன்மீதும் கருணாரஸத்தைக் கனக்க வர்ஷித்துக் குளிரச்செய்தருள்க வென்றதாயிற்று (இமஞ்ச ஜநம் ஸிஞ்சேத்) மேட்டு நிலம் பள்ளநிலம் என்னும் வாசிபாராதே வர்ஷிக்குமிறே மேகம்; அடியேனிடத்திலுள்ள தாழ்வுகளைக் கணிசியாதே அருள்புரிய வேணுமென்கை. இது சகாரத்தினால் தேறுங்கருத்து.

(4. குயில்.) குயிலுக்குள்ள பெயர்களைச் சொல்லுகின்ற அமரகோஶத்தில் "வநப்ரிய: பரப்ருத:" என்று சொல்லியுள்ளது. 'வநப்ரிய:' என்பதற்கு சோலைகளிலே ரமிப்பது என்று பொருள். இப்பாசுரத்தில் மூன்றாமடியில் *அண்டர் கோனமருஞ் சோலை* என்றது காண்க. திருமங்கையாழ்வார் *ஆராமஞ் சூழ்ந்த வரங்கம்* என்றருளிச் செய்திருக்கையாலே அரங்கத்தைச் சூழ்ந்த ஆராமங்களிலே ரமிப்பதாம் இந்த ஸ்ரீரங்கநாதகோகிலம். [பரப்ருத:] என்கிற கோகிலநாமதேயமும் அரங்கனுக்கு ஒக்கும். குயிலின் பரப்ருதத்வம் உலகப்பிரசித்தம். (காக்கைகளினால் வளர்க்கப்

படுவது.) எம்பெருமானுடைய பரப்ருதத்வத்தை பட்டர்தாமே உத்தரசதகத்தில் (74.) *ஆஸ்தாம் தே குணராசிவத்* இத்யாதி ச்லோகத்தில் *அர்ச்சகபராதீநாகிலாத்ம ஸ்திதி:* என்னும் விசேஷணத்தினுல் நிருபித்தருளியுள்ளது காண்க. ஸஹஸ்ரநாம பாஷ்யமான பகவத்குணதர்ப்பணத்தில் 'விதேயாத்மா' என்கிற திருநாமத்தின் விவரணத்தில் இந்த *அர்ச்சக பராதீநேத்யாதிவிசேஷணத்தை (பட்டர் தாமே) நன்கு விவரித்தருளியிருப்பதுங் காண்க. * விஜிதாத்மா விதேயாத்மா * என்ற அவ்விடத்தில் 'அவிதேயாத்மா'என்று பதம் பிரித்துப் பொருளுரைத்தார் சங்கராசார்யர். அதிலுள்ள அஸ்வாரஸ்யாதிசயம் ரஸிகர்களினுல் உணரத்தக்கது.

ஆக, வண்டு, மயில், கொண்டல், குயில் என்ற நான்கும் அண்டர்கோனுகிய அரங்கனேயென்று பட்டர் ஸ்ரீஸூக்தியைக்கொண்டு நிருபிக்கப்பட்டதாயிற்று.

# வேதவிசாரப் பகுதி

சென்றவிதழில், தேவ:, தேவ, தேவா: என்ற மூன்று பதங்களின் ஸ்வர ஸந்நிவேசங்களைப்பற்றி விளக்கினேம். அதில் (தேவெள) என்கிற பதத்திற்கும் (தேவா:) என்கிற பதத்திற்கும் நிமித்தபேதேந ஸ்வரம் மாறுபடுமென்றும், தேவ: என்கிற பதத்திற்கு ஓரிடத்திலும் ஸ்வரம் மாறுபடாது—எங்கும் ஆத்யநுதாத்தமும் அந்தோதாத்தமுமாகவே ஓதப்பட்டுவருமென்றும் எழுதியிருந்தோம். இது நிஸ்ஸம்சயவிபர்யயமான விஷயம். இதைக்கண்ட ஒரு வைதிகர் மாயூரத்திலிருந்து நமக்குக் கடிதமெழுதிக் கேள்வி கேட்டுள்ளார். அதாவது, ப்ராஹ்மணத்தில் காடகச்ருதியில் மூன்றுவது ப்ரச்நத்தில் ¤தபஸா தேவா தேவதாம் அக்ர ஆயந்¤ என்னு மநுவாகத்தில் ¤ச்ரத்தயா தேவோ தேவத்வ மச்நுதே¤ என்கிறவாக்யம் உலகமெங்கும் ஒரே ரீதியாக ஓதப்பட்டு வருகின்றது. இதில் (தேவோ) என்கிற இரண்டெழுத்துக்கள் ஸ்வரிதமாகவும் பிரசயமாகவுமுள்ளது. பதம் பிரித்தால் (தேவ:) என்று ஸர்வாநுதாத்தமாகத்தானே பிரித்தாக வேண்டும். ஆகவே இதற்குத் தாங்கள் எழுதியிருக்கிற ஸ்வரநையத்யம் பங்கமடைந்துவிட்டதே, இதற்கு ஸமாதானம் ஸ்ரீ ராமாநுஜன் முலமாகவே தெரிவிக்கவேணும் என்று. அந்தப் பெரியாரைத் தெளிவிக்கும் வியாஜத்தினுல் வைதிகவுலகம் முழுவதையும் தெளிவிக்கிறேம்.

★ ச்ரத்தயா தேவ: ★ என்றவிடததில் தேவ: என்று பதம் பிரிக்கச் சிறிதும் ஔசித்யமில்லை. தேவ: என்கிற பதம் எண்பது ப்ரச்நங்களுள் ஓரிடத்திலும் ஸர்வாநுதாத்தமாதக் கிடையாது; இது இருக்கட்டும். அதற்கு முந்தின ச்ரத்தயா என்கிற பதம் இங்கு அந்தோதாத்தமாகவன்றே நிறுத்தப்பட வேண்டியதாகிறது; தேவ: என்று பதம் பிரித்தால் முந்தின பதம் அப்படித்தான் [அந்தோதாத்தமாகத்தான்] நிற்கும். ஸம்ஹிதையிலோ ப்ராஹ்மணத்திலோ அந்த ஸ்வரம் எங்கும் காண்பதில்லை. (7-5) *ச்ரத்தயா வாச்ரத்தயா வா¤ இத்யாதி காண்க. ப்ரக்ருதஸ்தலத்திலும் ¤ப்ரஜாபதே ச்ரத்தயாவை ச்ரயஸி¤ என்றவிடங்காண்க. ஆக, இரண்டு பதங்களுக்கும் ஸ்வரவைரூப்யம் வாராதபடிக்கு

(அதேவ:) என்று பதம்பிரிப்பதே யுக்தம். இதை நாம் நமது வேதாத்யயந ஸர்வஸ்வத்தில் நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னமே விளக்கியுள்ளோம்.

இனி (தேவௌ) என்கிற பதத்தைப்பற்றி யெழுதுகிறேன். இது ப்ரதமா (அல்லது) த்விதீயாத்விவசனமாயிருந்தால் (தேவ:) (தேவா:) என்னும் பதங்கள் போலவே அந்தோதாத்தம். *ஸ்தௌமி தேவாவச்விநௌ* இத்யாதி ஸ்தலங்கள் காண்க. இதுவே ஸம்புத்தியாயிருந்தால் நிஹதமாகும். (ஸர்வாநுதாத்தமாகும்.) *யயோர் வாம் தேவௌ* என்றவிடம் காண்க. இனி (தேவீ) என்னும் பதத்தைப்பற்றிக் கேண்மின். இது ப்ரதமைகவசநமாயிருந்தால் தேவ பதம் போலவே அந்தோதாத்தம். *ப்ரணோ தேவீ ஸரஸ்வதீ* இத்யாதிகள் காண்க. (இதில் ஒருவிசேஷம்.) (3-2) தேவீ த்வஷ்ரௌ மா மா ஸம் தாப்தம்* என்றவிடத்தில் தேவீபதந்திற்கு ப்ரக்ரஹம் ஓதப்பட்டுவருகிறது, இது ஏகவசனந்தானே, த்விவசநமன்றே. அப்படியிருக்க ப்ரக்ரஹ பாடம் எப்படி வந்தது? என்று பலர் கேட்பதுண்டு. *யாவதீ—த்யாவாப்ருதிவீ* த்யாவா ந: ப்ருதிவீ இமம்* இத்யாதி ஸ்தலங்களிலும் இங்ஙனே கேள்வி கேட்கலாம். *ச்சந்தஸி பஹுளம்* என்றே பாஷ்யகாரர்கள் எழுதிவைத்துள்ளார்கள். ப்ரக்ருஹ்யமானதேவீபதம் ஸ்வரிதாந்தம்.

## முராரி கவியின் கர்பீரமான வாக்கு

தேவீம் வாசமுபாஸதே ஹி பஹவஸ் ஸாரம் து ஸாரஸ்வதம்
ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்டோ முராரி: கவி:.
அப்திர் லங்கித ஏவ வாநரபடை: கிந்த்வஸ்ய கம்பீரதாம்
அபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:.

உபாஸநாபலத்தினால் விளைகின்ற ஞானம் பயனற்றது; குருமுகமாகக் கற்பதனால் விளையும் ஞானமே மிகச் சிறந்ததென்பது பற்றி முராரிகவி பணித்த பத்யமிது. பலர் வாக்தேவதையை உபாஸித்துப் பண்டிதர்களாகிறார்கள். அன்னவர்களைப் பண்டிதர்களென்று சொல்லலாமாயினும் ஸாரஸ்வத ஸாரத்தை அவர்கள் அறிந்தவர்களாகார்கள்; ஆசார்யகுலத்தில் குட்டுப்பட்டுக் கல்விபயின்ற முராரியே (நானே) ஸாரஸ்வத ஸாரஜ்ஞனவன். வானரவீரர்களெல்லாரும் (இலங்கை செல்வதற்குக்) கடலைக் கடந்துவிட்டார்களெனினும் கடலின் ஆழத்தை ஒரு வானரமுமறியாது. திருவடியைக்கேட்டால் 'ஆகாச வழியாய்ச் சென்ற நான் கடலாழத்தை என்னறிவேன்' என்பர். மற்ற வானரவீரர்களைக் கேட்டாலோ 'அணை கட்டிச் சென்ற வெமக்குக் கடலாழமென்ன தெரியும்' என்பர்கள். ஆகவே ஒரு வானர வீரனும் கடலாழமறியான்; 'மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட* என்கிறபடியே கடல் கடையும்போது மத்தாக நாட்டப்பட்ட மந்தர மலை பாதாளலோக மளவும் மூழ்கி யிருந்ததாதலால் அஃதொன்றையே கேட்டுக் கடலாழ முணரலாகும். இவ்வாறாக உபாஸநபலத்தினால் பண்டிதரானவர்கள் ஸரஸ்வதியின் உள்மருமமறியவல்லரல்லர். குருகுலத்திலிருந்து நெடுநாள் சிரமப்பட்டவர்களே அஃதறியவல்லார்களென்றதாயிற்று. ... ...

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகாபிநந்தனம் P. B. A.

*(1—12—75)* இன்று கிடைத்த ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன *(336 & 337)* பத்திரிகையில் **விவாத சாந்தி** என்னும் மகுடத்தின்கீழ் வெளியிட்டுள்ள விஷயங்கள் விசாலஹ்ருதயர்களால் விசேஷித்துப் போற்றத்தக்கவை. "உபயகலையாருக்கும் தம் தம் ஸம்பிரதாயப் பொருள்களே யுக்தமானவை யென்று விளக்கவேண்டிய ஸந்தர்ப்பம் ஏற்பட்டால் இதர ஸம்ப்ரதாய நாமத்தையோ ததாசார்யநாமத்தையோ குறிப்பிடாமல் தம்தம் ஸம்ப்ரதாயத்தின் உபபத்திகளைமட்டும் எழுதிக்கொள்ளவேண்டியதென்று ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா பத்திரிகையும் ஸ்ரீ ஸுதர்சன பத்திரிகையும் உடன்படிக்கை செய்துகொண்டதாக" வெளியிட்டுள்ளது. 'மற்ற ஸ்ரீ வைஷ்ணவ பத்ரிகைகள் எல்லாமே இவ்வடிப்படையில் ஒழுகவேணுமென்று ப்ரார்த்திப்பதாகவும், எழுதப்பட்டுள்ளது. ஸ்ரீவைஷ்ணவ பத்ரிகைகளில் ஸ்ரீ ராமாநுஜனும் ஒன்றுதலால் அதன் நிர்வாஹியான அடியேன் ஸவிநயம் ஸப்ரணமம் விஜ்ஞாபிப்பதை ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் குறிக்கொள்ளவேணும். எந்த ஸம்ப்ரதாயத்தையும் எந்த ஆசாரியரையும் நிந்திக்கவோ குறைகூறவோ அடியேன் நெஞ்சிலும் நினைத்திலேன். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஸ்வரஸமான அர்த்தத்தைப் பெரியார் பக்கலில் தெரிந்துகொள்ளவேணுமென்னு மாசையினால் மட்டும் ஏதோ எழுதிவருகிறேன். ஸ்ரீ ராமாநுஜன் *328, 329* இதழ்களை நடுநிலையில் நின்று வாசிப்பவர்களுக்கு இது எளிதாகத் தெரியும். அடியேன் தென்கலை வடகலை ஸம்ப்ரதாயார்த்த விஷயங்களில்மட்டும் ஆராய்ச்சி செய்பவனல்லேன். நேத்ரச்ரோத்ரங்களுக்கு இலக்கான விஷயங்களில் விமர்சிக்கவேண்டியதாகத் தோன்றுமவற்றில் மனச்சாக்ஷிக்கு விரோதமின்றி விமர்சிக்கப் புகுவது அடியேனுக்கு நெடுநாளைய வழக்கமாய்விட்டது. அடியேனுடைய வாழ்நாளில் எத்தனை விஷய விமர்சங்களில் அடியேன் தலையிடநேர்ந்திருக்கிறதென்பதை சென்னை T. நகரில் மஹாப்ராஜ்ஞராய் விளங்கும ஸ்ரீமதுபயவே. ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமி யொருவரே ஆலோசியாமல் வரிசையாகச் சொல்லவல்லவர். சிலவற்றை யெடுத்துக்காட்டுகிறேன். (காலஞ்சென்ற) ப்ரஸித்தரான அனந்தக்ருஷ்ண சாஸ்த்ரி யென்பவர் ஸ்வாமி தேசிகனுடைய சததூஷணியை தூஷித்து சதபூஷணியென்று வெளியிட்டார்; அதற்கு உடனே முந்துறமுன்னம் சதபூஷணீ வஜ்ரகுடாரமும் பின்பு வஜ்ரகுடார விஜயத்வஜமும் வெளியிட்டவனடியேன். மயிலையில் ஸம்ஸ்க்ருத காலேஜில் ப்ரொபஸராயிருந்த போலஹம் ராமசாஸ்த்ரியென்பவர் த்ரமிடாத்ரேயதர்சநம் என்றொருநூல் எழுதி விசிஷ்டாத்வைத மதம் அதிநவீனமென்று பலபலவும் வெளியிட்டிருந்தார். அதற்கு உடனே மறுப்பெழுதி சாங்கரசிரோபூஷா என்று வடமொழியிலும் தென்மொழியிலும் வெளியிட்டவனுமடியேன்.

வடநாட்டில் பலபலமதாந்தரஸ்தர்கள் நம்முடைய பகவத்ராமநுஜதர்சனத்தை தூஷித்தெழுத, அவர்களுக்கெல்லாம் (எனது) வைதிகமநோஹரா பத்ரிகையில் விசிஷ்டாத்வைத விஜயத்வஜம் முதலிய ஏழெட்டுநூல்களை யெழுதிவெளிட்டிருப்பவனுமடியேன். ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்ய மென்கிற நூலை யாருக்காகவெழுதி

வெளியிட்டிருக்கிறேனென்பதை ஆஸ்திகவுலகம் முழுதுமறியும். அதெல்லாம் கிடக்கட்டும். மிகமுக்கியமானதொருவிஷயம் நினைவூட்டுகிறேன் கேண்மின். [தென்கலை வடகலை சச்சரவுகளில் சிறிதும் ஸம்பந்தப்படாத விஷயங்களையே இப்போது ப்ரஸ்தாவிக்கிறேனென்பதை மறக்கவேண்டா; மறக்கக்கூடாது.]

இக்கச்சிமாநகரில் ப்ரத்யக்ஷராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி சிலபலவாண்டுகட்கு முன்பு பாடசோதனம் என்றொரு புத்தகத்தை வடமொழியில் எழுதியச்சிட்டு வெளியிட்டிருந்தார். (அதன் விஷயமென்னவென்றால்) கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம் முதலான காலக்ஷேப க்ரந்தங்களில் சிலபல தவறுகள் ஓலைப்பேடுகளிலுங்கூட சோதிக்கப்படாமல் ஏறிவிட்டனவாகவும், அவற்றைத் தாம் பெரும்பாலும் தம்முடைய புத்திபலத்தாலே சோதிப்பதாகவும் காட்டி "அது அப்படியிருக்கவேணும், இது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்; அதை அப்படித் திருத்தலாமென்று தோன்றுகிறது, இதை இப்படித் திருத்தினாலொழியப் பொருந்தாது" என்று இங்ஙனே பலபல வகையாகவெழுதி, நெடுங்காலமாகப் பெரியோர்கள் பேணிவந்த பாடங்கள்பலவற்றையும் சின்னபின்னமாக்கியிருந்தார். அது அடியேனுடைய பார்வைக்கு வந்தது. "பல பெரியார்கள் பக்கலிலே இங்ஙனே பாடம்கேட்டிருக்கிறேன்" என்றோ "பழைய தாளகோசங்களில் இங்ஙனே பாடம் காண்கிறது" என்றோ அந்த ஸ்வாமி தெரிவித்திருந்தாராகில் உபேக்ஷித்திருக்கலாம். அப்படியல்லாமல், தாம் ஊஹிப்பதாகவும், தம்முடைய ஆலோசனையில் இப்படியிப்படி தோன்றுவதாகவுமே யெழுதித்திருத்தினபடியால் இதை விமர்சித்தேயாகவேணுமென்று தோன்றிச் சிரமப்பட்டுப் பல ஸ்ரீகோசங்களை யாராய்ந்ததில் அந்த ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தம் மறுக்கத்தக்கதே யென்று நிச்சயிக்கப் பட்டு "பாடசோதந பரீக்ஷா" என்கிற மறுப்பு நூலை விரிவாகவே யெழுதி உடனே வெளியிட்டேன்.

ஸ்ரீபாஷ்யாதிகள் தெலுங்கு, க்ரந்தம், தேவநாகரி ஆகிய மூன்றுலிபிகளில் வெகுகாலமாகவே பதிப்பேறியிருப்பதால் அவற்றில் திருத்தம் பெற்றிருக்கிற பல பாடங்களைத்தாம் திருத்துவதுபோல்காட்டுதல் (2) அவசியம் திருத்தவேண்டிய இடங்களைத் திருத்தாமலே விட்டிருத்தல், (3) இவர் புதிதாகத் திருத்தியிருப்பவையெல்லாம் ஒன்றுகூட ஏற்கத்தக்க திருத்தமன்றிக்கே ச்ருதப்ரகாசிகையை நோக்காமலே சில திருத்தங்கள் செய்திருந்தல் என்று—இவ்வகையில் விஷயங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக்காட்டி அவருடைய சோதனம் அப்ராமாணிகம் என்று முடித்திருந்தேன். அந்த பரீக்ஷாக்ரந்தம் எனதுவைதிக மநோஹரா மூலமாக உலகம் பரவியிருந்தது. [இது 1945-ஆம் வருஷத்தில்] எனவே, முப்பது வருஷங்களுக்குமுற்பட்டசெய்தி.

"ஜ்ஞாதாவாயும் உத்தமாச்ரமியாயுமிருக்கிற மஹாஸ்வாமியின் க்ரந்தத்தை இவன் ஏதோ அஸூயையினால் பழித்துவிட்டான்; இது ஸ்வாமிக்கு மிகவும் அவஜ்ஞாவஹமல்லவா? இதை நாம் வெறுமனே விட்டுவிடலாகாது; ஸபை கூட்டி இவனை வரவழைத்து வாய்மாளப் பண்ணியேயாகவேணும்" என்று கனத்த ரோஷத்தோடு தீவ்ரமான முயற்சிகொண்ட அந்தஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்கள் ஒருநாளைக் குறிப்பிட்டு, தேவப்பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் வித்வத்ஸபை

கூட்டுவதாக விளம்பரம் வெளியிட்டு அடியேனுக்கும் அறிவித்தார்கள். குறிப்பிட்ட ஸமயத்தில் அங்கு விடைகொண்டேன். மண்டபம் நிறையப் பல வித்வான்கள் கூடியிருந்தார்கள். இப்போது ஸ்ரீமதஹோபிலமட ஆஸ்தானத்தை யலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமத் அழகியசிங்கர் [அப்போது க்ருஹஸ்தாச்ரமியாய்] அந்த ஸதஸ்ஸை அலங்கரித்தருளியிருந்தபடி. [இதில் அடியேன் எழுதும் விஷயங்களில் ஏதேனும் பொய்ம்மையிருப்பதாகத் தோன்றினால் அந்த நம்மஹாஸ்வாமிமூலமாக மெய்ம்மையுணரலாமென்றே ஸ்ரீஸ்வாமி திருநாமத்தை இங்கு நிர்தேசித்தபடி ] பூர்வாச்ரமஸ்த கோழியாலம் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் உபாத்யாயராயிருந்த ஸ்ரீமதுபயவே. (கீர்த்திமூர்த்தியான) இளங்காடு. ரங்காசாரியர் ஸ்வாமி ஸதஸ்ஸுக்கு அக்ராஸநாதிபதியாக வரிக்கப்பட்டிருந்தார். கோழியாலம் ஸ்வாமியின் சோதனங்களையெல்லாம் யுக்தமென்று ஸ்தாபிப்பதற்காக அவருடைய அந்தேவாஸிகளில் தலைவரான ஸ்ரீமதுபயவே. உத்தமூர். வீரராகவாசாரியர்ஸ்வாமி வெளியூரிலிருந்து ஸதஸ்ஸுக்கு வரவழைக்கப்பட்டிருந்தார். ஸதஸ்ஸு ஆரம்பமாவதற்குமுன்னே அடியேனுடையபாடசோதனபரீக்ஷையில் அது தவறு, இது தவறு என்று சிலவித்வான்களிடம் அவர்பேசிக்கொண்டிருந்தார். பிறகு ஸதஸ்ஸு ஆரம்பமாயிற்று. அடியேனுடைய பரீக்ஷா க்ரந்தத்தை முன்னடியே பல வித்வான்களுக்கு ஸமர்ப்பித்திருந்தேனாதலால் அவரவர்கள் முன்னமே கடாக்ஷித்திருந்து விமர்ச வைகரியில் அடியேனைச் சில கேள்விகள் கேட்கவும் அடியேன் விடைகூறவுமாக நடந்துகொண்டிருந்தது. பிறகு ஸமாதானம் சொல்லவேண்டிய ஸமயம் அணித்தாக, ஏழெட்டு நிமிஷங்களுக்கு முன்னமே நம் உத்தமூர் ஸ்வாமி யெழுந்து சென்றுவிட்டார். உடனே திரும்பிவருவரென்றேப்ரதீக்ஷித்திருந்தார்கள்வித்வான்கள் மேற்கே தேரடியருகில் சென்றுகொண்டிருக்கிறாரென்று சிலர் சொல்லக் கேட்டபின் ஸதஸ்ஸு விஸர்ஜனம் செய்யப்பட்டது. அவர் எழுந்து சென்றதற்குக் காரணம் இன்னதென்று ஒருவருமறிந்திலர். தம்முடைய கக்ஷிக்கு அனுகூலரான வித்வான் ஒருவருமிருந்திலரென்று சென்றதாகப் பிறகு பேசிக்கொண்டார்கள். அதைப்பற்றி இப்போது விசாரலேசமுமில்லை அச்செய்திகளை அனைவரும் அறவே மறந்துவிடலாம். ப்ரக்ருதம் அடியேன் விஜ்ஞாபிக்கும் விஷயத்தைக் குறிக்கொண்மின்.

ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டாலும், அவருடைய பாடசோதன க்ரந்தமோ, அதற்கு மறுப்பாக அடியேனெழுதிய பரீக்ஷாக்ரந்தமோ மறையவில்லையே. நம்உத்தமூர்ஸ்வாமிபிறகுச்ருதப்ரகாசிகையோடு ஸ்ரீபாஷ்யத்தை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறாரென்பதை அறியப்பெற்ற நாம் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தத்தில் மிகவும் யுக்தமானதென்று திருத்தப்பட்டுள்ள பாடங்களை இந்தப் பதிப்பில் இவர் ஆதரித்து வெளியிட்டிருக்கிறாரா? நம்முடைய மறுப்புகளுக்கு ஏதேனும் விடைகூறியிருக்கிறாரா? என்று பார்க்கத் தோன்றிப் பரிசீலித்துப் பார்க்கையில், ஸ்வாசார்யருடைய சோதனங்களை த்ருணீகரித்துத் தள்ளினதோடு அடியேன் பரீக்ஷாக்ரந்தத்தில் ஸ்தாபித்த பாடங்களையே பெரும்பாலும் பதிப்பித்திருக்கும்படியைக் கண்டேன் "ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே" என்ற தேசிக திவ்ய ஸூக்திப்படி ஆசார்யரையே பரதெய்வமாகக் கொண்டிருக்குமிவர் — அவருடைய உபதேசங்களையே அருமருந்தாகக் கொண்டிருக்குமிவர்-என்னசெய்யவேண்டும்? ஆசார்யர் திருத்திக்கொடுத்த

பாடங்களைத் தாம் ஆதரித்தமை காட்டவேண்டும், ப்ரதானபாடமாகப் பதிப்பியா விடினும் (புட்நோட் கொடுக்கும் முறையில்) பாடாந்தரமாகவாவது பதிப்பித்திருக்க வேண்டாமா? (கோழியாலம்) ஸ்வாமி திருத்திய பாடங்கள் தவறுஎன்பதை நான் ஸாமான்யமாகக் காட்டியிருக்கவில்லை; ஒவ்வொன்றிலும் விபுலமான நிரூபணங்களை அசைக்கமுடியாதபடி செய்திருக்கிறேன். ஏதேனுமொருவகையில் அவற்றுக்கு மறுப்பு வெளியிட்டிருக்கவேண்டும். ஸர்வாத்மநா கைகூப்பிநிற்கும் நிலையே காண்கிறது. இவ்விஷயங்கள் வித்வான்கள் விமர்சிக்கவேண்டியவையாதலால் அடியேன் ஸம்ஸ்க்ருதத்திலேயே விரிவாக விளக்கியெழுதிய ஆசார்ய ஸூக்திரக்ஷா என்னும் நூலை அடியேனுடைய ஸம்ஸ்க்ருத (மாஸிக) பத்ரிகையான வைதிக மநோஹராவில் வெளியிட்டேன். ஆசார்யர் திருத்தின பாடங்களை உத்தமூர்ஸ்வாமி ஏன் கொள்ளவில்லை? என்று கேட்டால், "உலகுக்கெல்லாம் உபயோகப்படக்கூடிய ஸ்ரீகோசத்தில் விவாதாஸ்பதமான பாடங்களை யதேஷ்டமாகப் புகுத்தலாகாதென்கிற எண்ணத்தினல்—என்று இவர் விடைகூறலாம். அது அழகியதோ?

உலகமறிய ஒன்றே காட்டுகிறேனிங்கு. ஸ்ரீ பாஷ்யோபக்ரமத்தில் ஸமாஸ விஷயமான சங்காஸமாதான ஸ்தலத்தில் "ப்ரதிப்ரஸவ ஸம்பவாத்" என்றே உலகமெங்குமுள்ள பாடம். ஒரு தாளகோசத்திலிருந்து அடியேன் உபதேசம் பெற்ற பாடம் ஸத்பாவாத் என்பது இப்பாடத்தை அடியேன் தவிர வேறு யாரும் ப்ரஸ்தாவித்ததில்லை. 'இது இவன் ஸ்வதந்திரமாகக் கல்பித்தபாடம்' என்று சில வித்வான்கள் இற்றைக்கும் விவாதப்பட்டே வருகிறார்கள் ஏறக்குறைய ஐம்பது வருஷமாக இது விவாதத்திலுள்ளது. இப்படியிருந்தும், இவர் ச்ருதப்ரகாசிகாயுக்த ஸ்ரீ பாஷ்யப் பதிப்பில் ஸம்பவாத் என்கிற பாடத்தை அறவே தள்ளி ஸத்பாவாத் என்கிற பாடத்தையே நிஸ்ஸம்பந்நமாகப் பதிப்பித்துவிட்டார். 'ப்ரதிவாதிபயங்கரருடைய பாடம் பேர்க்கவும் பேராதது' என்பதே இவருடைய திடநம்பிக்கை. இந்த நம்பிக்கையினுல்தான் ஸ்வாசார்யர் சிக்ஷித்த பாடங்களையும் தள்ளி நான் ஸ்தாபித்த பாடங்களையே கொண்டிருக்கிறாரென்பதில் வாய்திறக்க வழிகிடையாது. ஸம்பவாத் என்ற பாடத்தைக் கோழியாலம் ஸ்வாமியும் திருத்தவில்லை. அந்த ஸ்வாமியின் பாடத் திருத்தங்கள் மிகவும் அநீதியானவையென்று நான் எழுதிப் பிரசுரஞ் செய்ததை (அக்காலத்தில்) மறுக்கமுயன்றவிவர், வெகுகாலம்பொறுத்து "முன்மறுக்க முயன்றது பிசகு; அண்ணாவின் க்ரந்தத்திலெழுதியுள்ளதெல்லாம் பாராட்டத்தக்கதே" யென்று தமது பதிப்பினுல் கல்வெட்டாக்கி வைத்ததனுல்- இதேபோல் என்னுடைய எந்த நிரூபணமும் ப்ராமாணிகமே, அசைக்கமுடியாததே—என்று நிலைநாட்டி வைத்தாராயிற்று. இதில் ஸந்தேஹமுண்டோ?

## மேலேயெழுதுவன காணீர்

1. அந்தரத்வாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் ந ச த்வயோரநயோ:* என்று தொடங்கும் வாக்யத்தில் (த்வயோ:) என்கிற பதம் இருமுறை விழுந்திருப்பது பிசகென்றும், அது ஒரு முறைதானிருக்கத் தக்கதென்றும், மற்றொரு முறையிருப்பதை அடித்துவிடவேணுமென்றும் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனத்தில் இருக்கிறதே. அதை என்ன பண்ணினீர்? அடித்துவிட்டீரா? என்று கேட்டால் அங்கு ச்ருதப்ரகாசிகையில் (த்வயோ:) என்பது இருமுறையிருப்பதை நிலைநாட்டி,

ஒன்று வாக்யபரமென்றும் மற்றென்று உபாஸநபரமென்றும் விவரித்திருப்பதாக நம் அண்ணா தமது பரீக்ஷாக்ரந்தத்தில் மறுவாய்திறக்க வழியில்லாதபடி நிரூபித்திருப்பதனால் கோழியாலம் ஸ்வாமி திருத்தியது தவறென்று துணிந்து, அண்ணா நிலைநாட்டிய படியே அச்சிட்டிருக்கிறேன். வேறு என்னபண்ண முடியும்? என்று தான் உத்தமூர் ஸ்வாமி விடை யளிக்கவேணும்.

2. தக்ஷிணாயநாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *ப்ரஹ்ம ப்ரபித்ஸத:* என்றிருப்பது வியாகரண விருத்தமென்றும், (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரபித்ஸமாநஸ்ய) என்றாவது (ப்ரபித்ஸோ:) என்றாவது திருத்தவேண்டுமென்றும் எழுதியிருந்தாரே அங்கு என்ன செய்தீர்? என்று கேட்டால் கோழியாலம் ஸ்வாமி இப்படி ஸ்வேச்சையாகத் திருத்துவது ஸாஹஸமென்றும், திருத்தவேண்டியது அவசியமானால் (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரேப்ஸத:) என்று திருத்துவதோ (பாடாந்தரமாகக் கொள்வதோ பொருத்தமென்றும் உபபத்தியோடு அண்ணா எழுதியிருந்தபடியால் அதுதான் மிகவும் யுக்தமென்றுகொண்டு அப்படியே அச்சிட்டேன். என்றுதான் நம் உத்தமூர் ஸ்வாமி ஸாதிக்கவேணும்.

3. ஈக்ஷதிகர்மாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் *ஈக்ஷிது: ஸ்தாநதயா நிர்திஷ்ட* என்றவிடத்தில் (ஈக்ஷிது:) என்பது அந்வயிக்கமாட்டாதென்றும் (ஈக்ஷிதஸ்தாநதயா) என்றுதிருத்தியே யாகவேண்டுமென்றும் (தத்ஸ்தாநதயா) என்றாவது திருத்தியாக வேண்டுமென்றும் கோழியாலம் ஸ்வாமி எழுதியிருந்தாரே, அப்படியே திருத்தினீரா? என்று கேட்டால், இங்கு ஸ்வாமி ஏதோ மருண்டு விட்டாரென்றும், மறுபடியும் ஸ்ரீ பாஷ்ய பங்க்திகளை ஸேவித்தால் தெளிவு பிறக்குமென்றும், (ஈக்ஷிது:) என்றுதானிருக்க வேணுமென்றும் அண்ணா நன்கு விளக்கியிருப்பதனால் உண்மையில் இங்கு ஸ்வாமி ப்ரமித்து விட்டதாகவே தெரிய வந்தபடியால் ஸ்வாமி திருத்தின பாடத்தை உபேக்ஷிக்கவே நேர்ந்துவிட்டது. என்றுதானே உத்தமூர் ஸ்வாமி கூறியாகவேண்டும்.

4. இந்த்ரப்ராணாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் உபாத்தமான *த்வமேவ மே வரம் வ்ருணீஷ்வ யம் த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே* என்கிற ச்ருதி வாக்யத்தில் (த்வமேவ) என்பதை (தமேவ) என்று திருத்தவேணுமென்று ஸுப்ரஸித்தரான ஓர் ஆசாரியர் உபதேசித்ததாகக் கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிறாரே, அதை அப்படியே திருத்தினீரா? என்றுகேட்டால், அந்தோ! எப்படித் திருத்தமுடியும்? மேலே (யம்) என்றிருப்பதற்குச் சேர, முன்னே (தம்)என்றிருக்க வேணுமென்று ஸ்வாமிநினைத்துவிட்டாரென்றும், அதுபிசகென்றும் அண்ணாவெகு யுக்தமாக நிரூபித்திருப்பதால் இதுவே சிறந்த ஆசார்யோபதேசமென்று கொண்டேன். இது ச்ருதிவாக்யமென்பதை ஸ்வாமி சிந்தியாமற்போனார். திருத்துவது ஆத்மஸாக்ஷ்யத்திற்கு ஒவ்வாததோடு அபவாதத்திற்கும் ஹேதுவாகுமென்று விட்டிட்டேன். என்றுதானே உத்தமூர் ஸ்வாமி உரைத்தாகவேண்டும்.

5. ப்ரயோஜநவத்த்வாதிகரணத்தில் *வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாதித்யாதி ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் ஐந்தாறு பங்க்திகளுக்குப் பிறகு

"தத்ரோத்தரம்—ந ஸாபேக்ஷத்வாத் இதி" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை அங்கிருந்து பெயர்த்து ஸூத்ரத்திற்குமுன்னே கொண்டு தள்ளவேணுமென்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருந்தாரே, அப்படியே தள்ளினீரா? என்று கேட்டால்—தள்ளின துண்டு; ஸ்ரீ பாஷ்யஸூக்தியைத் தள்ளவில்லை, அஸ்மதாசார்யோக்தியைத்தான் தள்ளநேர்ந்தது. அண்ணா பரீக்ஷையில் எழுதிய மறுப்பு மறுக்கமுடியாமலிருப்பதால். என்றுதானே உத்தமூர் ஸ்வாமி பகரவேண்டும்.

6. ஸம்பந்தாதிகரணத்தில் "ப்ருஹதாரண்யகே ச்ரூயதே" என்று ஸ்ரீ பாஷ்யோபக்ரமமிருப்பதில் "ச்ரூயதே" என்கிற க்ரியாபதம் அநந்விதமாகையால் அதைத் தூக்கியெறிய வேண்டியதென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிறாரே அதைத் தூக்கியெறிந்தீரா? என்று கேட்டால்,—இங்கும் அண்ணாவின் நிருபணம் அசைக்கமுடியாமலிருந்ததனால் என் செய்வேன்? ஆசார்யோக்தி திரஸ்காரபாபம் அபரிஹார்யமாயிற்று—என்றுதானே உத்தமூர் ஸ்வாமி அருளிச் செய்தாகவேணும்:

7. ரசநாநுபபத்த்யதிகரணத்தில் *விப்ரதிஷேதாச்ச* என்கிற ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில் "பந்தமோக்ஷஸாதநாநுஷ்டாநம் மோக்ஷஞ்ச ப்ரக்ருதேரேவ— இத்யாஹு:" என்றிருப்பதில் "இங்கு இதிபதம் இருக்கத் தகாதென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்; த்விதீயையிருக்குமிடத்தில் அது இருக்கக்கூடாதாகையால்" என்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிறாரே; அந்த இதியையெடுத்தெறிந்து விட்டீரா? என்று கேட்டால்—இதியின் உபபத்தியை அண்ணா வெகு ஸமஞ்ஜஸமாக நிருபித்திருப்பதனால் தெளிவுற்றேன். "அத்ர இதிபதம் ந ஸ்யாதிவ" என்றெழுதியிருக்கலாம் நம் கோழியாலம் ஸ்வாமி; "ந ஸ்யாதிதி நிச்சீயதே" என்றெழுதினது அவஜ்ஞையாய்விட்டது. இங்கு அண்ணாவின் நிருபணம்அதிமநோஹரம்—என்று தானே உத்தமூர் ஸ்வாமி மொழிந்தாகவேண்டும்.

8. *விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்* என்கிற அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே *ஸந்நிதே: அகிஞ்சித்கரத்வம்* என்றிருப்பதை அகிஞ்சித்ரூபத்வமென்று திருத்தவேணுமென்று நிச்சயமாகச் சொல்லுவேனென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிறாரே; இந்த நிச்சயத்தையாவது நிலைநாட்டினீரா? என்றுகேட்டால்; எந்த நிச்சயமும் காசுக்குதவாததாயிற்றே அதைப் பாடாந்தரமாகப் போடவுங் கூட நெஞ்சாலும் நினைக்கமுடியாதபடியன்றோ அண்ணா வரைந்திருக்கிறார் என்று தானே உத்தமூர் ஸ்வாமி பேசியருளவேண்டும்.

9. ஸஹகார்யந்தரவித்யதிகரணத்தில் ஸித்தாந்தத்தில் "ச்ரவணமநநாப்யாம் ப்ராப்தம் வேதநம் ப்ரதிலப்ய இத்யர்த்த:" என்றதில் ப்ராப்தம் என்றதை அப்ராப்தமென்று பெரியோர்களின் உபதேசத்தைக்கொண்டு அண்ணா திருத்தியிருந்தாரே; பாவப்ரகாசிகையில் ப்ராப்தம் என்கிற பாடம் ஆதரிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு கோழியாலம் ஸ்வாமி "ப்ராப்தமென்றிருந்தாலும் அப்ராப்தமென்றிருந்தாலும் உபய பாடத்தையும் நிர்வஹிக்கக் குறையில்லை" என்றெழுதியிருந்தாரே, அங்கு என் செய்தீர்? என்று கேட்டால்;—என்ன செய்ய முடியும்? ஆசார்யாபிப்ராயரக்ஷணம் அப்ராப்தமென்று முடித்தேன். அண்ணாவின் நிருபணம் அசைக்கமுடியாமலன்றோ இருக்கிறது. என்றுதானே பகர்ந்தாகவேண்டும்.

10. ஸ்வாசார்யர் காட்டின் திருத்தங்களை உபேக்ஷித்ததுபோல அண்ணு காட்டின திருத்தங்களையும் உபேக்ஷித்ததுண்டோ? என்று கேட்டால்;—அது எப்படி முடியும்? 'தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம' என்று அடியேன் விஜ்ஞாபிக்கவேணுமோ? என்று தானே உத்தமூர் ஸ்வாமி அருளியாகவேணும்.

இங்ஙனேயாக எழுதிக்கொண்டுபோனல் இதற்கு ஓய்வுதானுண்டோ?

முக்கியமானவொருவார்த்தை கேளீர். ஸ்ரீமத் உத்தமூர்ஸ்வாமியோடு தென்கலை வடகலைஸம்ப்ரதாயார்த்த விஷயகமான விவாதம் நடைபெற்றது ஸ்வல்பம், ஸாதாரணவிஷயங்களில் அதிகம். ஸ்ரீராமாநுஜனை ச்ரத்தையோடு ஆநுபூர்வியாக வாசிப்பவர்களுக்கு ஒன்றும் மறந்திராது. ஒன்று கேண்மின். எம்பெருமானருடைய வைபவத்தில்-திருமாலையாண்டான் பக்கலில் திருவாய் மொழிப்பொருள்கேட்கும்போது "த்ரோணுசார்யருக்கு ஏகலவ்யன்போலே" இத்யாதியுள்ளதன்றே. இது கல்பிதமென்று (பரிஹஸித்தும்) எழுதியிருந்தார் உத்தமூர்ஸ்வாமி. உடனே அன்றே தெளிவித்தேன். ஆளவந்தார்க்குத் தனியனுக ஸ்வாமியருளிச்செய்த 'யத்பதாம் போருஹத்யாநேத்யாதி ச்லோகத்தை கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகோபக்ரமத்தில் வியாக்கியானித்தருளாநின்ற ஸ்வாமி தேசிகன்.

"த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹம் இத்யபிப்ராயேண த்யாநமுக்த:" என்றருளியிருப்பதை (ஸ்ரீராமாநுஜனில்) எடுத்துக்காட்டினேன். உலகமெல்லாம் கண்டது. அப்போது பல தேசிகபக்தர்கள் எழுதிய கடிதங்களின் ஒன்றுமட்டும் (ஸ்ரீராமாநுஜனில்) வெளியிடப்பட்டது "அபிநவதேசிக: ப்ராசீந தேசிகஸ்ய" போதும்போதும். பின்பழகிய பெருமாள்ஜீயர்பணித்த ஆறுயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்திலுள்ள தமிழ்ப்பங்க்தியை அப்படியேயன்றே மொழிபெயர்த்தருளினர் தேசிகன். இப்படி ஒன்றன்று இரண்டன்று. இதெல்லாம் தென்கலை வடகலை மதச்சச்சரவன்றே. (காலஞ்சென்ற) D. T. தாதாசாரியர்க்கும் எனக்கும் இருபத்தாறு வருஷங்கள் நடந்த விவாதங்களில் ஸம்ப்ரதாயவிவாதம் ஸ்வல்பம். ஸம்ஸ்க்ருத வித்வான்கள் பொதுவாக விமர்சிக்கக் கூடியவிஷயங்களில் நடந்த விவாதங்களை அபரிமிதம். ஸுபாஷிதநீவிக்கு ஸ்ரீவைகுண்டவாஸியான (சதுச்சாஸ்த்ரவித்வான்.) தண்டரி. பட்டப்பாதாதாசாரியர் ஸ்வாமி பணித்திருந்த ரஸமய விபுலவியாக்கியானத்தை (D. T.) அச்சிடத்தொடங்கி.........(கித்யமாநயோ:) என்பதை (வித்யமாநயோ: என்றுப்ரமித்துஅச்சிட்டுவிதண்டாவாதங்களாலே பலபலஏடுகளைநிரப்பிப் போராடினது அப்பப்ப! எவ்வளவு அநியாயமான விஷயமென்பதை ஸ்ரீ உத்தமூர் ஸ்வாமி நன்கறிவர். இதில் எனக்கு ஏறக்குறைய ஓராயிரம் ரூபாயன்றே செலவு. 'பூயிஷ்டாம் தே நமஉக்திமென்றதிலுண்டான விவாதமும் தென்கலை வடகலை விவாதமன்று, வடகலை வ்யாக்க்யாதாக்களும் ஆதரித்தெழுதியுள்ள அவ்வர்த்தத்தில் ஒருவருஷம் தொடர்ந்து நடந்தது விவாதம். மிகமிக விரிந்துவிட்டது அபிநந்தனம். உபஸம்ஹரிக்கிறேன்.

உலகம் போற்றும் உயர்பதவிவாழும் உயர்திரு. ஸுப்ரீம் கோர்ட்டு ஜட்ஜ் A. அழகிரிசாமியவர்கள் ஒரு Speachல் பேசியதை சென்னை அட்வகேட் ஸ்ரீ உவே. R. V. சேஷாத்ரி ஐயங்கார் அப்படியே எழுதியனுப்பிய கட்டுரை ஸ்ரீ ராமாநுஜன் 242ல் மூன்று பக்கம் வெளிவந்துள்ளது. அதில் இரண்டு பாராக்களை மட்டும்

இங்கெடுத்துக்காட்டுகிறேன்; 13—1—1969ல் சென்னைத் திருப்பாவை சாத்துமுறையன்று ஆயிரவர் நிரம்பிய திருவிழில் ஜட்ஜ் அவர்கள் பேசினது;—

"எனது நண்பர் திரு. சம்பகேசய்யங்கார், அட்வகேட் என்னை ஒருநாள் பைஸானி மாதவய்ய செட்டி சாரிடியின் சார்பில் நம் அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமிகள் நிகழ்த்திய உபந்யாஸத்திற்கு அழைத்துச் சென்றார். அதற்காக திரு. சம்பகேசய்யங்காருக்கு நான் மிகவும் கடப்பாடுடையவனாயிருக்கிறேன். அன்றுதான் முதன்முதலாக நான் ஸ்வாமியின் உபன்யாஸத்தைக் கேட்டேன். அதுமுதல் மீண்டும் மீண்டும் அவர்களின் உபன்யாஸங்களைக் கேட்கவேண்டுமென்ற அவா எனக்கேற்பட்டது. முடிந்தபோதெல்லாம் மனைவி மக்களுடன் கேட்டு வருகிறேன். அவர்களும் தங்கள் நண்பர்களிடமெல்லாம் ஸ்வாமியின் உபன்யாஸத்தின் பெருமையைப்பற்றிக் கூறிக்கூறி, அவ்வுபன்யாஸங்களுக்கு அவ்வவர்களையும் அவசியம் வரவேண்டுமென்றும், ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் கேட்டு ஆனந்திக்க வேண்டுமென்றும் கூறி வருகிறார்கள். ஸ்வாமியின் உபன்யாஸம் எனக்குப் பிடித்திருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் முக்கியமாக இரண்டை இங்கே கூறுகிறேன். அருளிச்செயல், உபநிஷத்துக்கள், புராணங்கள், வியாகரணம், தமிழ் இலக்கணங்கள், சாகுந்தலம் முதலிய ஸம்ஸ்கிருத இலக்கியங்கள் முதலான எல்லாவற்றிலுமிருந்தும் கடல் அலைகள்போல் தட்டுத்தடங்கலின்றி மேற்கோள்கள் எடுத்துக்காட்டும் அழகு வேறு யாரிடமும் காணமுடியாததொன்று; என்னதான் ஆங்கிலம் படித்திருந்தபோதிலும், B. A. B. L, M. A, B. L. முதலிய பெரிய பட்டங்கள் பெற்றிருந்தபோதிலும், இவ்விதமான ஆழ்ந்த படிப்பும், அதைப் பிறர்க்கெடுத்துச் சொல்லி அவர்களை மகிழ்விக்கும் ஆற்றலும் வேறு யாருக்கும்வராது. அடுத்தது ஸ்வாமியின் ஸமரஸ மனப்பான்மை."

"நம் ஸ்வாமி எங்கு யாரிடம்தவறு இருந்தாலும் சிறிதும் தயங்காமல் அதை எடுத்துச் சொல்லிவிடுவார். பயம் என்பதே அவரிடம் கிடையாது. அதற்குக் காரணம் அவருடைய தெளிந்த ஞானம்தான். ஒவ்வொருவரும் தன்தன் மதத்தில் உறுதியாக இருக்கவேண்டும்; மற்ற மதங்களை இகழக்கூடாது. ஒரு தெய்வத்தை வழிபடுபவன் அதைவிட்டு மற்றொரு தெய்வத்தைப் பற்றினால் இரு தெய்வங்களும் அவனைக் கைவிட்டுவிடும் என்று வேதமுரைப்பதாக நம் ஸ்வாமி எடுத்துக்கூறினார்".

இப்படிக்கு டிக்டேட் பண்ணினவர் ஸ்ரீமான் R. V. சேஷாத்ரி, அட்வகேட்;
இதில் இரண்டாவது பாரா உண்மை கண்டுரைத்த விஷயம்.

— நிகமனம் —

**ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகள் பெரும்பாலும் (நூற்றுக்குத்தொண்ணூறு)**
**பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளையடியொற்றியவை**
**அங்ஙனல்லாத சில உக்திகள் பரஸ்பர வ்யாஹதங்களாய்**
**★முன்னோர்மொழிந்த பாசுரத்திற்கு மூலமானவை.**
**என்கிற ஸித்தாந்தம் ★வாஸுதேவ க்ருஹம்**
**த்வேகம் நப்லாவயதி ஸாகர: ★ என்னும்**
**படியாகவுள்ளது.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத்வரவரமுநயே நம:

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யருளிச்செய்த திருப்பாவையின் ஸாரப் பொருள்களை மார்கழித்திங்களில் பத்தெட்டு நாட்களிலும் நாலைந்து நாட்களிலும் கேட்க விரும்புவார் பலருளர்; அன்னவர்களையும் மகிழ்விக்க விரும்பும் உபந்யாஸகர்களுக்கு உதவும்

# கோதைதமிழ்ச்சுவையமுதம்

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம். மஹாமஹிமோபாத்யாய

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பணித்தது.

## முன்னுரை

*பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழாகிய திருப்பாவையில் பாசுரந்தோறும் வாக்கியந்தோறும் எழுத்துத் தோறும் விசேஷார்த்த வமுதங்கள் பொதிந்து கிடக்கின்றன; இவற்றை அடியேன் தென்மொழியிலெழுதிய நான்கு உரைகளிலும் வடமொழியிலெழுதிய விரிவுரை யொன்றிலும் தெலுங்கு பாஷையிலெழுதிய தெளிவுரையொன்றிலும் ஸம்க்ஷிப்த மாகவும் விஸ்த்ருதமாகவும் விளக்கியிருக்கின்றேனெனினும் ஈண்டு விசேஷித்துச் சில அர்த்த ரத்னங்களை யளிக்கின்றேன். திருப்பாவைக்கு உயிர்நிலை ஆசாரியன் பெருமைகளை விவரிப்பதேயாகும். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் "கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றும், "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே" என்றுமருளிச்செய்யும் முகத்தினால் — பகவத்ஸம்பந்தம் தனக்குப் பயன்படாதொழிந்தாலும் ஆசார்ய ஸம்பந்தம் பழுதுபடாதென்பதை விளங்க வைத்தவளாகையாலே இத்திருப்பாவையில் பாசுரந்தோறும் ஆசார்யப்ரபாவத் தையே உள்ளுறை பொருளாக அமைத்துப் பாடியுள்ளாள். இப்பிரபந்தத்திற்கு விஷயம் மார்கழி நீராட்டமென்பது. முதற்பாட்டு. மூன்றும்பாட்டு, நான்காம்பாட்டு, இருபதாம்பாட்டு இருபத்தாறும்பாட்டுக்களில் நீராட்டத்தின் ப்ரஸ்தாவமிருந்தாலும், நீராடுவதற்குரிய இடத்திற்கு [அதாவது தடாகத்திற்கோ நதிக்கோ] இவ்வாய்ச்சி கள் சென்றதாக இல்லை. எல்லாருமாகக் கண்ணபிரான் ஸன்னிதியிலே சென்று சேர்ந்து *எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம் உன்க்கே நாமாட்செய்வோம்* என்று சொல்லி முடித்தார்கள். இதனால், பகவத் ஸன்னி தானத்தில் சென்று சேர்வதையே இவர்கள் நீராட்டமாக மறைத்துச் சொன்னார் களென்பது அறுதியிடலாயிற்று. இனி, வெறும் நீராட்டமென்னாதே மார்கழி நீராட்ட மென்கையாலே ஆசார்ய ஸன்னிதியில் சென்று சேர்வதை அந்தரங்கப்பொருளாக அமைத்திருப்பது அறியக்கிடக்கின்றது.

எங்ஙனே யென்னில், மார்கழி யென்னுஞ்சொல் மார்க்கசீர்ஷ மென்கிற வடசொல்லின் விகாரமாய் அமைந்தது. மிருகசீருஷ நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமாஸியுள்ள மாதம் மார்க்கசீர்ஷமாஸமென்றபடி. மாதப்பெயர்கள் ஸௌர மாநரீதியிலும் சாந்த்ரமாநரீதியிலும் வழங்கப்படுகின்றன. மேஷம் விருஷபம் மிதுநம் இத்யாதிவ்யபதேசங்கள் ஸௌரமாநரீதி. சைத்ரம், வைசாகம் ஜ்யேஷ்டம் இத்யாதி

வ்யபதேசங்கள் சாந்த்ரமாநரீதி. சித்திரை வைகாசி இத்யாதிகளான தமிழ் வழக்குக்களும் சாந்த்ரமாநரீதியையே அநுஸரித்தவை. சித்திரா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் சைத்ரம். விசாகாநக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் வைசாகம். மேல் ஒவ்வொன்றையும் இப்படியே பார்த்துக் கொள்வது. இவ்வகையில் மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் மார்க்கசீர்ஷமெனப்படுகிறது. நக்ஷத்ரங்களில் நாழிகையேறுதல் குறைதல்களுக்குத் தகுதியாக முன் நக்ஷத்திரமோ பின்நக்ஷத்திரமோ பௌர்ணமாஸியோடு கூடுதலுமுண்டு. அது நிற்க. மார்க்கசீர்ஷமென்னும் வடசொல்லே தமிழில் மார்கழியெனத் திரிந்தது.

ஆக இவ்வளவாலும் மார்க்கசீர்ஷமென்ற வடசொல்லின் பொருளிலேயே மார்கழியென்ற தமிழ்ச்சொல் உண்டாயிற்றென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. மார்க்கசீர்ஷமென்கிற இச்சொல்லுக்கு இப்பொருள் தவிர மற்றொரு பொருளும் ஸம்பாவிதமே. அதாவது, மார்க்க—சீர்ஷ என்று இரண்டு சொல்வடிவங்களாகக் கொண்டு 'மார்க்கங்களில் தலையானது' என்று கொள்வது. சீர்ஷமென்னும் வடசொல்லுக்குத் தலையென்று பொருள். மார்க்கமென்றது உபாயமென்றபடி. உபாயங்களில் தலையானது மார்க்கசீர்ஷமென்றதாயிற்று. கர்மஜ்ஞானபக்தி ப்ரபத்திகளுக்கும் மேலே ஆசார்யாபிமானமென்பது தலைசிறந்த உபாயமாயிருக்கும். அது தான் மார்க்கசீர்ஷமென்கிறது மார்கழியென்பதுமதுவே.

ஒரே சொல்வடிவமான மார்க்கசீர்ஷபதத்தை இரண்டு சொல்வடிவங்களாகக் கொண்டு இங்ஙனே பொருள் கொள்ளுகை சாஸ்த்ரஸம்மதமாகுமோவென்று சிலர் கேட்கக்கூடும். வாஸுதேவசப்தத்தை இதற்கு நிதர்சநமாகக் கொள்வது. இச்சொல்லுக்கு தத்திதவ்ருத்தியாலே வஸுதேவ புத்திரனென்னும் பொருள் யாவருமறிந்தது. 'வஸுதேவஸ்ய அபத்யம் புமாந்-வாஸுதேவ:' என்றே வ்யுத்பத்தியென்று நினைத்திருக்கிறோம். ஆனால் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் பட்டர் வாஸு:, தேவ: என்கிற இரண்டு பதங்களுக்கு ஸமாஸமாகவுங் கொண்டு பாஷ்யமிட்டிருப்பதைக் காணலாம்; அதுபோல இங்கும் மார்க்க—சீர்ஷ என்று இரண்டு பதங்களுக்கு ஸமாஸமாகக் கொள்வதிலும் குறையொன்றுமில்லை. இப்பொருளுக்குச் சேரவே ஆண்டாள் இத்திவ்வியப்பிரபந்தத்தில் பாசுரங்களை அமைத்திருக்கின்றாளென்பதை இனி மூதலிக்கிறோம். இது ஸம்க்ஷேபமாகத் தெரிவிப்பதாதலால் பாட்டுத்தோறும் சிற்சில சொற்களையோ சொற்றொடர்களையோ கொண்டு கூறுவோம். ... *

முன்னுரை முற்றிற்று.

**1. கதிர் மதியம் போல் முகத்தான்.** கதிரவன் போலவும் சந்திரன் போலவும் விளங்குகின்ற ஸ்ரீஸூக்திகளையுடையவர். ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் வேதார்த்த ஸங்க்ரஹம் முதலான க்ரந்தங்களை ப்ரவசனம் செய்யும்போது ஆசாரியர் ஸூர்யனைப்போல் ஜ்வலிப்பர். திருமந்த்ரார்த்தம் ஸ்ரீவசநபூஷணம் ஆசார்யஹ்ருதயம் பகவத்விஷயம் முதலான க்ரந்தங்களை ப்ரவசநம் செய்யும்போது ஸௌம்யமுகராய் *ஆஹ்லாதசீதநேத்ராம்புவா யிருப்பரென்கை. *நாராயணனே நமக்கே பறைதருவான்* என்றவிடத்து *ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநூம், மக்நாந் உத்தரதே லோகாந்* என்றது அநுஸந்தேயம்.

